மில்லாதவனும் சகல பாபநாசகனு முள்ள அந்த ஸ்ரீவிஷ்ணு பகவான் இப் புராணத்தில் முக்கியமாய் துதிக்கப் பட்டிருக்கிறான். இப்படிப்பட்ட இப் புராணத்தைக் கேட்பவன் அசுவமேத யாகத்தின் அவபிரதத்தில் ஸ்நானஞ் செய்த பலனை யடைவான். மேலும் பிரயாகத்திலேயும் புஷ்கரத்திலேயும் குருக்ஷேத்திரத்திலேயும் சேதுபந்தன சமுத்திரத்திலேயும் உபவாசாதி விரதா நுஷ்டானஞ் செய்பவன் எந்தப்பலனை யடைவனோ அந்தப்பலனை இப்புரா ணங் கேட்பதனாற் பெறுவான். ஓ மயித்திரேயரே! ஒருவன் ஒரு வருஷ காலம் அக்கினியை நன்றாய் ஓமத்தால் ஆராதித்து வந்தால் எந்தப் பலனை யடைவானோ அந்த நற்பயனை இதை ஒருக்காற் கேட்டுப் பெறுவான். ஒரு வன் ஜ்யேஷ்ட மாதத்து சுக்கிலபக்ஷத் துவாதசியில் யமுநா நதியில் ஸ்நானஞ் செய்து ஸ்ரீ மதுராபுரியில் கண்ணனை ஆராதித்தா லுண்டாகும் பயனை ஸ்ரீ கேசவனிடத்திலே மனதை வைத்து இப்புராணத்தில் ஒரு அத்தியாயங் கேட்பதனாற் பெறுவான். ஜ்யேஷ்ட மாதத்துச் சுக்கிலபக்ஷத் துவாதசியில் முன்பு உபவாச மிருந்தவனாகி யமுநா தீர்த்தத்தில் நீராடி மதுரையில் ஸ்ரீ மாதவனை யாராதிப்பவனுக்கு எந்தப் பலம் வருமென்றால் குறைவற்ற அசுவ மேத யாகத்தின் பலம் வரும். இப் படிப்பட்ட புண்ணியவான்களான தங்கள் குலத்தாராலே மேன்மை யடைவிக்கப்பட சிலருடைய செல்வத் தைக் கண்டு பிதுர்க்கள் சொல்லிய தாவது "நமது குலத்திற் பிறந்த எவ னாகிலும் யமுனா சலத்தில் நீராடி உப வாசமிருந்து ஜ்யேஷ்ட சுக்கில துவா தசியிலே மதுரையில் ஸ்ரீ ஜநார்த்த னனை அர்ச்சிப்பனா? அர்ச்சிப்பானாகில் நாமும் பிறரைப்போலே கரையேறின வர்களாய் மோக்ஷமென்கிற மேலான செல்வத்தைப் பெறுவோமன்றோ? ஜ்யேஷ்ட சுக்கில துவாதசியில் சுவா மியை யாராதித்துப் பிதுர்க்களுக்கு யமுனையிற் பிண்டத்தை யெவன் போடுவனென்றால், புண்ணியஞ் செய் தவர்களுடைய குலத்திற் பிறந்தவன் போடுவன்" என்று பிதுர்க்கள் ஆசைப்படுகிறார்கள். இப்படி அந்தப் புண்ணிய தினத்திலே யமுனா ஸ்நா னஞ்செய்து ஸ்ரீ கிருஷ்ணபகவானை யர்ச்சித்துப் பிதுர்க்களுக்குப் பிண்ட மிடுவதனா லெந்தப் பயனுண்டோ அந்தப் பயனை இப்புராணத்தின் அத் தியாய சிரவணத்தினாற் பெற்றுத் தன் பிதுர்க்களைக் கடைத்தேற்றுவான். இந்தப் புராணம் சமுசாரத்தை அஞ்சி னார்க்கு ரக்ஷகமாயும், செவியுறத்தக்க வைகளுக்குள்ளே மேம்பட்டதாயும், பரிசுத்தங்களுக்கெல்லாம் பரிசுத்தமா யும், தீயகனவுகளை யழிக்கவல்லதா யும், சகல தோஷங்களையும் போக்கத் தக்கதாயும், மங்களங்களுக்கெல்லா மேலான மங்களமாயும், புத்திரசம்பத் தைத் தரத்தக்கதாயும் விளங்குகின் றது.

ஆதியில் ஸ்ரீமந்நாராயண மகரிஷியி னால் செய்யப்பட்ட இப்புராணத்தைக் கமலோற்பவர் ருபுவென்பவர்க்கு உபதேசித்தார். அந்த ருபு பிரியவிரத ருக்குச் சொன்னார். அந்தப் பிரிய விரதர் பாகுரிக்கும், பாகுரி ஸ்தம்ப மித்திருக்கும், ஸ்தம்பமித்திரர் ததீச ருக்கும், அவர் சாரஸ்வதருக்கும், அந் தச் சாரஸ்வதர் பிருகுவுக்கும், பிருகு புருகுச்சருக்கும், அவர் நருமதைக் கும், அவள் திருதராஷ்டிரன் ஆபூர ணன் என்கிற நாகர்களுக்கும், அவ் விருவரும் நாகராஜனான வாசுகிக்கும், வாசுகி வச்சருக்கும், அவர் அசுவதர

ருக்கும், அவர் கம்பளருக்கும், அவர் ஏலாபுத்திரருக்கும் சொன்னார்கள். இப்படிப் பாதாள லோகத்திலே பரவியிருந்த இப் புராணத்தைப் பாதாள லோகத்திற் சென்றிருந்த வேதசிரசு என்கிற முனிவர் பெற்றுப் பூலோகத்திற் பிரமதி யென்பவருக்கு கொடுத்தார். அந்தப் பிரமதி ஜாதுகர்ணருக்குத் தந்தார். அந்த ஜாதுகர்ணர் மற்றப் புண்ணியவான்க ளநேகருக்குக் கூறினர். புலஸ்திய மகாமுனிவருடைய வரப்பிரசாதத்தினாலே இப்புராணம் எனக்கும் கியாபத்துக்கு வந்தது. நானும் மயித்திரேயரே! உமக்கு உள்ளபடி இப்புராணத்தை யறிவித்தேன். நீரும் இதைக் கலியின் முடிவிலே சினீகரென்பவருக்கு உரைப்பீர்."

"இந்த மகாபுராணம் பரம ரகசியமாயும் கலிதோஷ நாசநமாயு மிருப்பதை எவன் பத்தியுடன் கேட்பனோ அவனுக்குப் பாவமெல்லாந் தீரும். இப் புராணத்தைத் தினந்தோறுங் கேட்பவனுக்குச் சகல தீர்த்த ஸ்நான பலனும் சகல தேவதா ஸ்தோத்திரபலனும் கிடைக்கும். இதிற் பத்தத்தியாயங் கேட்ட மாத்திரத்திலே காராம் பசுவைத் தானஞ்செய்வதா லுண்டாகிய அருமையான புண்ணியம் கிடைக்கும். ஐயமில்லை. எந்தப் புருஷன் சகல சரீரகனாய்ச் சர்வ வியாபியாய்ச் சகல லோகத்துக்கு மாதாரமாய்த் தன்னிலே தானிருப்பவனாய் ஞானத்தினாலேயே அறியத்தக்கவனாய் ஆதியந்தமில்லாதவனாய்ச் சகல தேவதைகளுக்கும் இதனாயுள்ள ஸ்ரீ அச்சுதனை நினைத்துக்கொண்டே இப் புராண முழுவதையுங் கேட்பானோ அவன் பத்தியோடு அசுவமேதஞ் செய்த பலனையெல்லா மடைவான். இப்படி ஒருவாறு சொன்னேன். எந்தப் புராணத்தின் ஆதியிலேயும் மத்தியத்திலேயும் அந்தத்திலேயும் சராசர குருவாயும் பிரமஞான சொரூபியாயும் சகல ஜகத்துக்கும் சிருஷ்டி ஸ்திதி சங்கார கர்த்தாவாயுமான ஸ்ரீ அச்சுத பகவான் துதிக்கப்பட் டிருக்கிறானோ அப்படிப்பட்ட புராணத்தை முழுதுங் கேட்கின்றவனும் படிப்பவனும் சொல்லுகிறவனுமா யுள்ளவனுக்கு வரும் பலன் இப்படிப்பட்டதென்றுசொல்ல மூவுலகத்திலு மொப்பில்லை. ஏனென்றால், ஒப்பில்லாத மோக்ஷ சாம்பிராச்சியந் தரவல்ல ஸ்ரீ ஹரி பகவானே பயனா யிருக்கிறானன்றோ, எவனிடத்தில் மனம் வைத்தவன் நரகத்துக்குப் போகமாட்டானோ, எவனைத் தியானிப்பதற்குச் சுவர்க்கமும் இடையூறு விருக்குமோ, எவனிடத்தில் மனம் பற்றியவர்க்குப் பிரமலோகமும் அற்பமாய்த் தோன்றுமோ எவன் நிர்மல ஞானமுடையவர்களுக்கு இருதயத்திலிருந்துகொண்டு முத்தியை யளிக்கின்றானோ அப்படிப்பட்ட அச்சுதனைத் துதிப்பதனாலே பாவந் தீருமென்பது ஓராச்சரியமா? யக்கியேசுவரனை எவனை யக்கியமறிந்தவர்களான கர்மிகள் யக்கியங்களாலே ஆராதிக்கிறார்களோ, ஞானிகள் எவனைப் பிரம சொரூபியாகவும் பராபர சொரூபியாகவும் தியானிக்கிறார்களோ, எவனை நினைப்பவன் ஜனன மரணங்களையும் அறிவு தேய்வு வளர்ச்சிகளையும் காரிய காரணங்களா யிருத்தலையும் அடைகிறதில்லையோ அப்படிப்பட்ட ஸ்ரீ ஹரியைக் காட்டிலும் கேட்கத்தக்க வேறு பொருளென்ன வுண்டு? ஆதியந்தங்களில்லாதவனாய்ப் பிரபுவான எவன் பிதுர் ரூபியாயிருந்து விதிப்படி இடப்பட்ட கவியத்தையும் தேவரூபியாயிருந்து ஓமஞ் செய்யப்பட்ட அவியத்

தையும் புசிக்கிருனே, பிரமாணமுடையவர்களுக்கு எந்தப் பிரமாணமும் சகல சக்தி ஸ்தானமாயும் பிரமமாயுமிருக்கிற எவன் விஷயத்தில் ஒரு பரிச்சேதஞ் செய்யவொண்ணுதோ அப்படிப்பட்ட ஸ்ரீ ஹரிபகவான் காதிற்பட்டவுடனே சகல பாபத்தையும் போக்கிவிடுவான். எவனுக்கு முடிவும் உற்பத்தியும் இல்லையோ, பரிணமமில்லாத எவனுக்கு விருத்தியக்ஷங்களில்லையோ, எவன் விகாரமற்ற வஸ்துவாயிருக்கிருனே, புருஷோத்தமனும் துதிக்கத்தக்கவனுமுள்ள சர்வேசுவரனைத் திருவடி தொழுகிறேன். எவன் அந்தப் பரமபுருஷனுக்கு அநுகுணமானதையே அநுபவிக்கும்படியான சேஷபூதனுயிருக்கிருனே, எவன் தேவாதி பேதங்களில்லாமல் ஞானமே வடிவாகக்கொண்டு ஒருவனுயிருந்தும் தேவதை முதலான தேகங்களைக் கொண்டு அவற்றில் தானென்கிற மயக்கமுற்றதனுலே அநேகனுய் அசுத்தனுய்த்தோன்றுகின்ருனே, ஞானத்தோடு கூடியவனுய் மகத்து முதலான சகல தத்துவங்களையும் பரவச்செய்வதற்குக் கருமமூலத்தாற் கர்த்தாவாயிருக்கிருனே, எப்போதும் அவியயனுயுள்ள எம்பெருமானுடைய ஸ்வரூபமான அந்தப் புருஷனுக்குத் தண்டம் சமர்ப்பிக்கிறேன். எது அறிவு பரவுதலும் அசையாது நிற்றலுஞ் சேர்ந்துவயப்பட்ட ஸ்தானமாயிருக்கின்றதோ, புருஷனுக்குப் பாவபுண்ணியாநுபவ யோக்கியமான தேகாதிகளைத் தரவல்லதாய் முக்குணவடிவாயிருக்கின்றதோ, மகத்து முதலான அவஸ்தைகளை யடையாததாயும் சமுசார வுற்பத்திக்குக் காரணமாயும் தானே யுண்டானதாயும் எப்போதுமழியாததாயுமுள்ள பிரதானம் எதுவுண்டோ, எம்பெருமானுடைய ஸ்வரூபமான அதைத் தொழுகின்றேன். ஆகாசம் வாயு அக்கினி ஜலம் பூமி இவைகளின் செய்கை வடிவாயும், சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்கிற விஷயங்களாகிய போக்கிய பதார்த்தங்களைக் கொடுத்து வருவதாயும், ஆத்துமாவுக்கு ஞானேந்திரிய கருமேந்திரியங்களைக்கொண்டு உபகாரஞ் செய்வதாயும், சூக்ஷ்மமும் தூலமுமான சொரூப முடையதாயுமுள்ள வியக்த மென்கிற பகவானுடைய சொரூபத்தைப் பணிகிறேன். இப்படியாகப் பலவகைப்பட்ட வியக்தாவியக்த பிரகிருதிகளும் அப்பிராகிருத திவ்விய மங்கள விக்கிரகமும் ஆத்துமாவும், அஜனுய் எப்போதுமுள்ளவனை எவனுக்கு ஸ்வரூபமோ அந்த ஞானுதி ஐசுவரியமுள்ள ஸ்ரீ ஹரிபகவான் சகல ஆத்துமாக்களுக்கும் பிறப்பு இறப்பு மூப்புமுதலிய குற்றங்களில்லாத மோக்ஷசம்பத்தைத் தந்தருள வேண்டும்.

எட்டாமத்தியாயம் முற்றிற்று.



ஆறமம்சம் முற்றிற்று.

ஸ்ரீவிஷ்ணுபுராணம் ஸம்பூர்ணம்.

வாகீஸ்வரி அச்சகம், சென்னை.